உ

வெற்றிவேலுற்றதுணை.

# திருப்போரூரந்தாதி.

இஃது

திருவொற்றியூர்.

அருணாசலகிராமணியவர்களது

குமாரர்

## முனிசாமிகிராமணியவர்கள்

கேட்டுக்கொண்டபடி

திரிசிரபுரம் ம-ா-ா-ஸ்ரீ,

தமிழ்த்தலைமைப்புலவராகிய

## வி- கோவிந்தபிள்ளையவர்கள்

குமாரர்

## நாராயணசாமிபிள்ளை

என்பவராலியற்றப்பட்டு.

பெருவளூர்

## சோமசுந்தரகிராமணியவர்கள்

சென்னை, கன்னிகோவில்

## முநியப்பகிராமணியவர்கள்

இவர்கள் பேருதவியால்.

பாலசூரியோதய அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

௲௮௱௬௫ ௵

# சாற்றுகவிகள்.

ம-ள-ள-ஸ்ரீ, கா- பச்சையப்பமுதலியாரது
சென்னைக்கல்விச்சாலைத்தமிழ்ப்புலமை

## திரு- கேசவசுப்பராயமுதலியாரால்

இயற்றப்பட்ட

### கட்டளைக்கலித்துறை

சீரூர் சிரபுரச் செந்தமிழ்ப் பாவலன் செங்குவளைத் *
தாரூர் புயாசல நாரா யணவபி தானவள்ளல் *
காரூர் மலர்ப்பொழில் கற்பக நாட்டணி காட்டுந்திருப் *
போரூர் முருகப் பெருமா னந்தாதி புனைந்தனனே. *

ம-ள-ள-ஸ்ரீ- கா- பச்சையப்பமுதலியாரது
சென்னைக் கல்விச்சாலைத் தமிழ்ப்புலமை- வித்வான்

## ஈ- அண்ணாசாமிமுதலியாரால்

இயற்றப்பட்ட

### நேரிசை வெண்பா.

சீரார் நறும்பொழில்சூழ் செல்வச் சிரபுரத்து *
நாரா யணப்புலவ னற்றமிழால்- போரூர *
னந்தா திதன்னை யணிபெறச்செய் தேயுலகில் *
நந்தா மலீந்தனனே நன்கு. *

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பார்தடிந்து மேனாட்டுப்பகைதடிந்துபல்குவெற்றிப் பணைத்ததிண்டோட் *
சூர்தடிந்த செவ்வேளேதனிமுதல்வனென்றுணராத் தொன்மைசான்ற *
கார்தடிந்து. மெய்ஞ்ஞானந்தலைசிறந்துபோரியின் மேற்கடுப்பவத்தின் *
வேர்தடிந் துய்வானாராயணசாமியந்தாதி விளம்பினானே. *

க- வே- சுப்பராயமுதலியாராலியற்றப்பட்டது

### கட்டளைக்கலித்துறை.

தந்தா வளன்நம்பி யாஞ்சம ராபுரிச் சண்முகன்மேல் *
அந்தா திநூறு கலித்துறை யாக வறைந்தனன்சீர்ச் *
சிந்தா திநாவலர் கொண்டாடுங் கோவிந்த நிரன்சுதன் *
நந்தா ததிபநாராயண சாமிநன் னாவலனே. *

---

உ

வெற்றிவேலுற்றதுணை.

# திருப்போரூரந்தாதி.

## காப்பு.

கட்டளைக்கலித்துறை.

சொல்வந் துறைய வருணா விலென்குறை சூழ்ந்தொருங்க
நல்வந் தணைபுரிந் தந்தாதி கூற நற்போரியற்கு
வில்வந் தரிசடை நந்தலைக வேதத்தை வேலையிட்டுச்
செல்வந் தொழும்பர்க் கருளநிம் பத்துறை சிந்துரமே.

## அவையடக்கம்.

செந்தா தியங்கடித் தூளென்ற டியர்சொ றீங்கவியைச்
சிந்தா தியங்கலி போரூ ரனன்றிச் செகத்தர்கொள்ளக்
கந்தா தியங்கவைத் தாயென் றிரும்பின் கருந்துகள்போ
லந்தா தியங்கறைந் தேனறி யாமலென் னல்வினை.

## நூல்.

திருவளர் தண்மதி மங்குல் சங்காம்பல்வில் செண்பகத்தோ
டிருவளர் வள்ளை குவளைசெங் காந்தள்குன் றேந்தியிரு
மருவளர் வல்லி யிருபா லுறச்செம் மணிக்குன்றினின்
றுருவளர் போரியிற் காட்டினை யன்பருள் ளோர்ந்திடவே. (௧)

ஓரான் பிழைகளை யோரா னினன்சுத னெண்கடப்பந்
தாரான் வறுமையைத் தாரான் றொழும்பரைச் சண்டன்கொளப்
பாரான் பழனியம் பாரான் பழனம் படுபொழிற்போ
ரூரான் மலமன மூரான் சகத்தை யுடையவனே. (௨)

உடையவன் செம்பட் டுடையவன் சூருயி ருண்டசெவ்வேற்
படையவன் புல்லென் படையவன் பாக்கினன் பார்த்தறியா
இடையவன் றூய்மார்க் கிடையவன் போரியி லெண்கணற்கோம்
விடையவன் செங்கண் விடையவன் மைந்தனெம் வேலவனே. (௩)

வேலனை நங்குறை வேலனை யொப்பனை வேதபரி
பாலனைச் சங்கரி பாலனைச் சிலனைப் பண்சிலம்பார்
காலனைத் தானவர் காலனைத் தண்டமிழ் கற்பித்திடுந்
தாலனைப் போரியந் தாலனைச் சார்மின் றகைமையுண்டே. (௪)

உண்டாய் தொழும்பரு ளுண்டாய் மலர்த்தவன் பூறுநரு
கண்டாய் பொருட்கவி கண்டாய் மிகுஞ்சுவை கான்றணிகை
விண்டாய் சினத்தினை விண்டாய் சமர வியன்பதியாய்
வண்டாய்த் திரிந்தனை வண்டாய் குறமின் மலரிதழ்க்கே. (௫)

மலையன் செழுங்க மலையன் மருகன் வகுத்ததமிழ்க்
கலையன் சிவன்றன் கலையன் படப்படு காலனறு
தலையன் றென்போரித் தலையன் றொழும்பர் தழைத்திடும்பச்
சிலையன் சிலையின் சிலையன் சுதனுருச் ம்சந்தவனே. (௬)

சேந்தன் குறிஞ்சியின் வேந்தன் பணைசெழுஞ் செங்கலச
வேந்தன் முலைசுதை மாந்தன் மருவுசெவ் வின்கனிவா
யேந்தன் மணங்கமழ் கூந்தன் மழலை யிளங்குறத்தி
காந்தன் குணத்தினிற் சாந்தன் றென்போரியு கந்தவனே. (௭)

கந்தன் கரியமு குந்தன் பின்னுண்மகன் கைப்பிறயா
சிந்தன் பிரவொரு தந்தன் பின்னைவந்து சீர்படைத்த
சந்தன் றொழும்பரை மந்தன் றொடாமற் றடுத்தருள்சம்
பந்தன் பெரும்புய விந்தன் சமரப் பதியவனே. (௮)

பதியான் புகழை விதியான் மொழிந்திலர் பாழ்மனத்தே
முதியான் பெரிய மதியான் மதியிலிம் மூடனுக்குப்
புதியான் றொழும்பர் கதியான் குருபரன் போரியெனும்
பதியான் சுரநன் னதியான் வளர்ந்தவன் பாவலனே. (௯)

வலனைப் படுத்த வலனைச் சிறைநின்று மாற்றியநிர்
மலனைக் கவின்கொள் கலனைப் புனைவள்ளி மன்னைமுத்திப்
பலனைத் தருமத லனைக் குகனையம் பன்னிருகைத்
நலனைச் சமர தலனைப் பணிந்து தரிசித்தெனே. (௰)

சித்தன் புவிப்பிர சித்தன் பகையுயிர் தின்றசத்தி
யத்தன் மகத்துவ வத்தன் சமணர்த மாவிகொள்வி
தத்தன் பதுமப தத்தன் பிணிகாள் சமரபுரிக்
கத்தன் றொழும்பர கத்தன் விலகுபின் காட்டினெனே. (௰௧)

காட்டங் கணத்தகொண் டாட்டங் கொளிவ்வுடல் காயெரிக்கே
யூட்டங் குலவுற விட்டத் துயர முறுதலுக்கே
தேட்டங் கவர்பொருட் கூட்டஞ் செருக்குக்குச் சேந்தபோரிக்
கோட்டம் புகுந்து நின் னாட்டம் படியக் கொளல்சுகமே. (௧௨)

சுகத்தை விரும்பி யகத்தைப் புண்ணாக்கித் துயரமிகு
மிகத்தை யடைந்திச் சகத்தை விழைத்தென் னிலாபஞ்சொலஞ்
சுகத்தை நலக்கிஞ் சுகத்தை நிகர்மொழித் தூவிதழார்
முகத்தை யும்போரி யகத்தை யுங்கொண்ட முருகையனே. (௧௩)

முருக்கிய சத்தி தருக்கிய மாமயின் முத்தியன்பர்க்
குருக்கிய பார்வை செருக்கிய வுள்ளமு முன்புகழைப்
பெருக்கிய போரிச் சுருக்கிய ரூப பிறந்துபெற்றந்
நெருக்கிய பாவி திருக்கியல் கொண்டிட நேர்ந்ததென்னே. (௧௪)

நேர்ந்த பத்தர்க்கருள் கூர்ந்த கடாட்ச நினக்கடியே
னார்ந்த பரிவொடு சேர்ந்த டியேத்த வருள்புரியின்
வார்ந்த கழுதையை யூர்ந்த பரியென மாற்றலொப்பாந்
தேர்ந்த வறிவினர் சார்ந்தறை போரிச் சிவானந்தனே. (௧௫)

சிவந்த படிவ முவந்த கருணைத் திருமுகமே
ணிவந்த நுதலி னவந்தவழுந்திரு நீறின்னதத்
துவந்த ருகாக்ஷிச் சிவந்த மூவேற் றுறத் தோற்றினவென்
றவந்த வரும்போற் றவந்ததென் போரித் தலாதிபனே. (௧௬)

தலத்திற் பிறந்து மலத்திற் சுழன்று தகவுடையோர்
குலத்திற் பிரிந்து நலத்திற் பிறழ்ந்திழை கொள்பெண்களாற்
பலத்திற் குறைந்து புலத்திற் கலங்கிப் பயனெவன்மட்
கலத்திற் கெடுஞ்ச டலத்திற் றென்போரிக் கனத்தினனே. (௧௭)

கனமாமிறப்புத் பனமா மலிநோய்கனவறுமைத்
தனமா தருண்ணு மனமா மிவைநீ தருவதுபோல்
உனமா வடிக டினமா யுருகி யுனவருள்வாய்
வனமா வயலி லனமா ரும்போரிய மாமதியே. (௧௮)

மதிக்கண்ணியன் பர்க்கு தின்றவ போரி வதிபவவான்
மதிககண்ணியன் சுதனைதவிலுலவன்வாரழற்றிக்
கதிக்கண்ணியன் மருவுற் றனவோநிலா கண்கள்பதக்
கதிக்கண்ணியன் மொழியேற்குறுகண்செய்துகாண்டலினே (௧௯)

காண்டாவன னொடுகைகூப்பிநின்றெமைக் காவென்றண்டர்
காண்டாவனை முறைவாவியம்போரியிற் சத்தன்முன்னீ
மாண்டாவனை வரம்வேண்டுகியோவன்றி மாணிடத்தின்
மாண்டாவலை முற்றவ வென்னுதிகொலென்வானகமே. (௨௰)

வானகந்தந்த சமராபுரேச வளர்தணிகை
வானகந்தந்த மலைசிங்கங்கூடி மகிழ்பழனி
மானகந்தந்த வழேரகங்கொண்டவ வன்மனத்தை
மானகந்தந்த வடிபணிக்காததென் மாவினையே. (௨௧)

மாவினையானை முகவனைக்கொன்றவவன்முழுவெம்
மாவினையானை மகவைக்கொலத்தியின் வந்துருக்கப்
பூவினையானை வருக்குமென்செய்வன் புலவருள்ளப்
பூவினையாதை வளம்பாடும்போரிப் புலமையனே. (௨௨)

புலமையின் பந்தரல் போல்வன சேர்த்துப்பின் புன்னெறியே
புலமையின் மாட்டினை வெற்பனீ யாதலிற் பொன்னுமில்லேன்
குலமையின் மேல்வருங் கொற்றவ நாகக் குறிபடத்தல்
குலமையின் மொய்ம்பிரு வோர்கொண்க போரிய கொண்டிடவே.

கொண்டலம் புல்வண்ண மான்மரு காவினைக் கூற்றின்மலங்
கொண்டலம் புண்டவுட லொடு வீணிற் குதித்துதித்தேன்
வண்டலம் புந்திடுங் கங்கைமைந் தாவென் வகைசமர
வண்டலம் புத்தி மகிழமெய் யோடுநீ மன்னியதே. (௨௪)

மன்னவகந்த முருக வண்போரிய மாதவர்க்கு
மன்னவகந்த னிலஞ்ஞான மாசிருண் மாற்றினயான்
உன்னவகந்த வழச்செய்து மிக்கிரு ளூட்டுகலென்
உன்னவகந்த மலர்த்தாள்கள் கொண்ட வுத்தேசமதே. (௨௫)

தேசா கியவுருவீசா சிவற்கருள் செய்தவுப
தேசா சுயம்பிர காசா தென்போரித் திருப்பதியில்
வாசா குறத்தியி னேசா தினைப்புன வன்மையல்ல
வாசா துவென்மனங் கூசா துகொள்ளும் வசித்திடவே. (௨௬)

வசித்தலை யேற்றிச் சமணுயிர் வாங்கி வண்போரியிலே
வசித்தலை மேவிய சண்முக வைப்புல மாலிளையைப்
புசித்தலை மேவு துரும்பென வெவ்வைம் பொறியினிலன்
புசித்தலை கின்றன நிற்கெங்ங னன்பு பூண்டுய்வனே. (௨௭)

பூண்டா யினும்பயன் கொள்ளப் படைத்தநு பூவிலுடல்
பூண்டா வலின்மறந் தந்திட வோவெனைப் பூப்பித்ததே
தூண்டா விளக்கெனப் போரியினின்ற சுடர்ச்சுவணத்
தூண்டா மெனுந்திணி தோளா யருள்க சுகக்கடலே. (௨௮)

கடந்தணி கல்வியின் ஞானத்தின்மூத்திக் கலுழியென்னக்
கடந்தணி யாத களிற்றுக்குப்பின்மிக் கடவுலகை
இடந்தணி மான்மரு கோனாகிப் போரிய வேரகத்தின்
இடந்தணி காசலமேவலென் னெண்மையி லெங்களுக்கே. (௨௯)

எங்கடங்கா நின்றன சூர்தடிந்த வெறுழ்வலிகள்
எங்கடங்கா துவினைகோற வின்மையி னேந்திளைப்பா
சங்கடங்கா னலிவைமே னடத்திடத் தாநடந்துஞ்
சங்கடங்கா ணுச்சரணத்த போரித் தனிமணியே. (௩௰)

மணிபா ரொளித்தலைக் கட்செவிக் கங்கண மங்கைசெங்கை
துணியா ரொருபங்கணிந்த தகப்பன் சுவாமியென்னிற்
பிணியாளு மெய்ப்பொய்யுடை யேனற் போரிப்பிணித்தசெச்சைக்
கணியா ரமார்ப வெனக்கிரங்கென்றல் கழியநன்றே (௩௧)

கழியக் கருத்திரா யன்பரவாக் கடல் காணுமல்லற்
சுழியக் கடல்வலி யார்சூர்ச்சலதியுஞ் சுட்டுச்செந்தேன்
வழியக் கலுழிப் பொழில்சேரும் போரியில் வாசவருள்
பொழியக் குடைய னொன்றாலு மருள்க புயல்பின்றவே. (௩௨)

புயலைப் பொருத கண்ணன்மாமருக புராரிமையுண்
கயலைப் பொருத கண்ணாளிடத்தன்பர கத்துவெந்திச்
செயலைப் பொருத சரவணப்பொய்கைத்திறத்துதித்த
வியலைப் பொருந்த வெனக்குரை போரி யிருப்பவனே. (௩௩)

இருப்பவ னேகங் குடியாயவத்தொழி லென்றுமிந்தக்
கருப்பவ னேற்கரு ளில்லையென் றோர்ந்துங் கனமனப்பூ
விருப்பவ னீத்தருண் ஞானக் கள்ளுண்ண வினியபோரூர்
விருப்பவ னேநின் பதாம்புயம் வண்டாய் விழுமதிவே. (௩௪)

விழுமலங் காதுடல் செய்யுஞ் சரோருகத்து வேதியன்றன்
கழுமலங் காண வருபால கண்டங் கறைகொண்டவன்
றொழு மலங்கார சமராபுரேச துணைக்கரத்தைத்
தொழு மலங்காமற் பிணியினிச் செய்கிலன் றொல்லைவிட்டே (௩௫)

தொல்லைக் கடலினஞ் சுண்டபிரான்சுத தூயவருட்
செல்லைக் கணிக்க வொண்ணா விறைவர வென்னி லூக்குமனக்
கல்லைக் கரைத்துக் கசிந்தன்பு கொள்ளக் கருத்தில்லையேல்
மல்லைக் கடின மலையைப் பிளந்த வழியிலதே (௩௬)

இலவே கனியெனக் காக்கின்ற கிள்ளைக் கிலையெனும்போல்
புலவேனும் வேலவ ஞானந் தருமிரும் பூதி சரண்
அலவே நிலையென் றடைந்தேற் கருளில்லை யாகுமெனுஞ்
செலவே சமரபு ரேசா கருணைத் திரைவெள்ளமே (௩௭)

வெள்ளென் பதைநாய்கறிக்கக் கறிக்க மிகவுதிர
மெள்ளென் பதிரசமே யறியாத வியல்பதுபோல்
உள்ளென் புதாக்கொ ளுடலைச் சுகமென் றுதிகொண்டேன்
றள்ளென் றறிவரு ளொண்சமராபுரிச் சற்குணனே. (௩௮)

குணங் கடுகேனும் வருமோ வெனக்குங் கொடுத்த கலென்
றணங்க கவைம்புல னாய்செய வாவியை யந்தகன்றன்
கணங்கவர் செய்ய வினியெப்பிறப்பென் கவலையெண்ணில்
மணங்கமழ் போரிக் கிறைவா பித்தற்கு வருங்குருவே (௩௯)

குருவே குறமகள் காந்தா குழப்பிய கோரசூர்க்கொக்
குருவே ரறுத்துக் குலவனாக் குத்திய வுக்ரவலிக்
குருவே லவநின் னிணையடி நெஞ்சிற் குறியுடல் வெங்
குருவேன் செய்விஞ் ஞாபனமதி போரிக் குகவையனே (௪௰)

ஐயோ வையோ வெனைப்போ லுளரோவிவ் வவனியிலென்
மெய்யோடு பொய்யையு மெய்யே யடியனை மேவலரோ
சையோக மாதரைத் தேடுநற் சாத்திரந் தன்மறுழுப்
பொய்யே யெனவெனும் பித்தனற் போரியிற் போதகமே. (௪௧)

போதகம் பிர புராதன வன்பரம் போருகமாம்
போதகம் பூத்த திருவே சமரபு ரேசவிருட்
போதகம் பெண்ணு யிருண்ணு முன் காக்கப் புகாதிருக்கிற்
போதகம் பவனக் கையடைகீழ்ந்த புகழில்லையே. (௪௨)

புகழோம் பொருளயற் கோதியதேசிக பூங்கிழங்கை
யகழோசை யேனற் புனஞ்சென்றபாத வகத்தில் வஞ்சந்
திகழோர மெண்ணு மெனைவந்தளிப்பதிற் றேவநினைக்
கிதழோவிலது புகழோ வறைதி யிழுக்கறவே (௪௩)

இழுக்கென்பதென் னிடத்துண்டாயது நினவோன்பர்மாட்
டொழுக்கென்ப தண்டாய நீதலினல்குர வோதுதியின்
முழுக்கென்றல் கண்டே னவர்ஞானபோகமுந் நீர்கண்டனர்
அழுக்கென்பது சமராபுரநின் னிடத்தாகியதே. (௪௪)

ஆகியபூத மைந்தா லுடல் பின்னு மனவுமுறையே
பேகிய போதி லொருங்கிய மவ்வுயி ரோற்பதுண்டோ
யோகியர் பேசிய தேசிகபோரி யுறைபவதீம்
பாகியலின் மொழி பெண்களின் கொண்க பயன்புகலே (௪௫)

புகலப் புகலவின்பந் தருநின் மெய்ப்புகழதனை
யிகலப் புகல்வர்க் கிரட்டிப்பதேயின்ன லென்பதென்பால்
அகலப்புகன்று தெரிவித்ததேயென்னை யாற்றுவனே
சகலப் புவனம் வலம்வந்த போரியிற் சத்தியனே. (௪௬)

சத்தி முத்தங்கொண்ட வுத்தமபோரித் தலத்தவட்ட
சித்தி மற்றும்பல கற்றறிஞருநின் செய்கையன்றோ
சுத்தியி லானிற் செய்சூத்திரமாந வத்தாம்புடற்குட்
சித்திரமாயுயி ரோகாமற்பொத்துந் திறமுன்னினே. (௪௭)

திறம்பலறத்தி லெனப்புன் கொடுவழிச் சென்றுழன்று
மறம்பலஞ்சைப் புரிந்தவமாழ்ந்த வறுமையனுக்
கறம்பல சொல்லி யிடர்வருமென்றஞ்சி யாவிருந்தாய்
திறம்பலசோலை மணங்காலும்போரியி னின்றவனே. (௪௮)

நின்றவரும்பர் பணிபாதநேரலர் நேர்படைகள்
பொன்றவரும்பர போரியிலாம்பலம் போதொடிங்கு
நின்றவரும்படு வாயலர்செய்முனைன் னீகரம்போன்
மன்றவரும்பரு மங்குவியாமுனும் வந்தருளே (௪௯)

வந்தவரங்கந் தொழும்பத போரியில் வாசபொழிற்
சந்தவரங்கன் மருகாவிருவினைத் தட்டிரும்பைச்
சிந்தவரங்கடுக் கும்படியாளுக சிற்றின்பநீ
தந்தவரங்களைப் போற்கொளத் துன்பத்தைத் தள்ளவினே. (௫௰)

தள்ளாடிமெள்ளக் கிழவேடங்கொண்டு தனிப்புனத்தி
லுள்ளாடிருவடிதாழ்ந்தவபோரி யுழையமன்றி
னள்ளாடிமைந்த பெரியாய்பொறுத்தரு ளென்செய்குற்றம்
வெள்ளாடி முன்பொருள் போல்வெளிப்பட்டு விளங்கினுமே (௫௧

விளங்கனி போன்முலை வள்ளிமணாள விலங்கலின்மேற்
களங்கனி டிக்க நிலவொழு காற்றிற் கடுவனுமுன்
டுளங்கனியா நிற்கும் போரூரயானுனை ஆற்றிலாத
றுளங்கனியாயமு தாகிய துன்னருட் டேனதுயே (௫௨)

நதிகரத்தன்றொரு கண்ணைப்பிடுங்கி நலம்படவே
வதிகரவைத் தெம்மனோரி லொருவரும் வாழ்ந்தனரவ்
விதிதரவில்லை நினக்காறிருகணு மேவியென்னே
பதிதரவெற்கொரு கண்ணிற்கடையருள் பட்டிலதே (௫௩)

பட்டிடமால்வரை சூர்வேலைவிட்ட பராக்கிரமமுந்
தெட்டிடமாகனைக் கட்டழகும்மைய னுஞ்சிவனும்
விட்டிடமா மடம் போதிப்புமின்னன மேவியென்னே
யிட்டிடமாவரு ளேற்றூர்க்குப்போரிய வின்றெனினே. (௫௪)

இன்றுவந்தென்னை வறுமைப்பிணி நலிந்தின்னல்செய்து
கொன்றுவந்தேகும தாதலிற்போரியிற் கோனெனவே
தொன்றுவந்திக்கு மகவெனவெங்கட்குத் தோன்றியவா
சென்றுவந்தித்தே னருள்செட்டியாதலிற் றின்மருந்தே (௫௫)

தின்மையு நன்மையு நீயென்றிருக்கவத் தென்புலக்கோன்
புன்மைக்கடாவுகைத் தென்னைவன்றண்டிற் புடைத்திடித்து
வன்மைக்கொடாவி கொளுங்கொடுந் துன்பவன் வாதைக்குநீ
யன்மைப்பெறுவை கொம்லார்ந்துணை போரியி லாண்டவனே. ( )

ஆண்டலைக்கேதனன் போரூரவன்ற னருஞ்சிகிக்கென்
வேண்டலைச்சொல்லி யவனற்றத்தில்வெரிந் மேவச்செய்து [யி
சேண்டலைச்செல்லுதல் போலென்னிடைக்கொண்டு சேரச்சொன்
னீண்டலைக்காற்றி லன்மாமயில்காணும்மினமதினே (௫௭)

இனங்களுமென் பெற்றதந்தையுந்தாயு மிளமனையுந்
தனங்களுமின் பழு மெய்யும்பொய்யன்றித் தடம்பணைவா
யனங்களுலாஞ் சமராபுர நீயும் பொய்யாமடியேன்
மனங்கலுழ் துன்ப வறுமையுமெய்யாய் வருத்தலினே. (௫௮)

வருத்திக்கடமுலை மங்கையர்மால்செய்து வஞ்சனையா
லருத்திக்கடல்புக் கழிந்திடவோ நின்னை யண்டினற்குப்
பொருத்திக்கதி யளிப்பாயோ புகன்மதிற் போரிய நின்
கருத்திக்கடையற்று வாளாவிருக்கின்ற காரணத்தே. (௫௯)

காரண மாமயி லேறுநற் போரியிற் கந்தநின்னை
யாரண மாகத் தொழுமன்பர் தந்தைய யன்மதவேள்
வாரண மாக த்திலூர்ந்தா னவர்க்கருள் வைப்பதுவோ
பூரணமாவற மன்பனல்லாவெனைப்போக்கிவிட்டே. (௬௰)

விட்டேனடக்கியக் காமாதி யாளறையும் விட்டுமனை
கட்டேனனாக்கண மாகிலுமென்கண் கடாட்சி யாகில்
நட்டேன திகழுஞ் சமராபுரேச நின் னல்லடிக்காட்
பட்டேனவை பின் னுருமற்புதவெனப் பண்ணுகவே. (௬௧)

பண்ணமைத் தீஞ்சொல் வெண்ணித்திலப்பற் செம்பவளமிதழ்க்
கண்ணமைத் தோள்கண் கயல் தாட்டளிரொன்றோர் காரிகையை
பெண்ணமைத் தன்னடிக்காட்கொள்வதோ மனமே யெனிற்பூ
வண்ணமைப் போரியன்செய்கையு மற் றெனமாற்றியதே. (௬௨)

மாற்றுப்பிறவிச் சரணாட்புயத்தை மனைவிழைவாற்
சாற்றும் பழவடியாரொடும் போரியிற் சார்ந்தவநின்
பாற்றுன்னியான்வதிதேமீண்டிடிலுனைப்பாரலனைத்
தூற்றும் படிவைத்துக் கொள்வாய்வினை விற்சுரர்தருளே. (௬௩)

சுரந்து பனுவ லமிழ்தன் பரூர்றந் துணைச்செவியால்
இரந்துண்டு போரியிருப்பவ வென்னெஞ் சிரும்பையருள்
அரந்துணையாகச் சமமாய்விளங்க வராவினையேற்
புரந்துறையாநின்ற நின்றொழில்யாவும்புரிந்திடுமே. (௬௪)

புரிந்தூநின்பாலெங் ஙனன்புசெய்வேன் திருப்போரியவென்
விரிந்தூறையைம்புலக் கள்வர்தந்தொண்டென வீண்வழக்காய்ப்
புரிந்துறுகண்செய நின்னிடந்தீர்த்திடப் போய்ச்சமூகந்
தெரிந்துனைப்போம்வரு வீரோனக்கேட்கிலா செப்புகவே. (௬௫)

செப்புகவிழ்த்த முலைத்திரியப்பகி செல்வ வள்ளித்
துப்புகடுக்கு மிதழுண்டு போரியிற் றொண்டர்சொல்லும்
அப்பு கழுக்குறை யாகிய நின்பணி யாற்றவுநான்
ஒப்புகடத்தலி னென்மனஞ் சொல்வழி யொன்றிலதே. (௬௬)

ஒன்றேதகைமையதாயன் பருக்கருளொன்றிமுன்னே
நின்றேயருளுஞ் சமராபுரேச நினதிடத்திற்
சென்றேகவிகளைப் பாடலிற்றீங்கவி செய்திரத்தல்
நன்றே தருமல்லவோ மானிடரிட நாடிடினே (௬௭)

நாடிதொடருட னன்னயமான தன் னற்றொழிலைக்
கூடியுவந்துயர்ந் தின்புறுமாவியின் கூற்றினன்றே
பாடிநின்கீர்த்தி பணியாதிருக்கிற் பருவுடற்குத்
தேடியுவமை தெரிகிலம்போரியிற் றிண்மையனே (௬௮)

திண்மையிற் றிண்மை தினைதகம்போலொரு திண்மையில்லை
நுண்மையி னுண்மை யணுதகம்போலொரு நுண்மையில்லை
உண்மையிலென்னக நற்குரவா லுள் ளுருகக்கண்டுந்
வண்மைநின் னுள்ளத் திலையெனிற் போரியிற் காவலனே. (௬௯)

காவலருஞ்சம ராபுரிவாச ககனருஞ்செந்
நாவலரும்புக ழுத்தமபற்ற நமனெனும்வே
டாவலருந்துவ ரென்றுடற் கூட்டுறை யாழுயிர்ப்புட்
சேவலருந்திணை யீவாரில்லாமற் றிகைக்கின்றதே (௭௰)

திகையெட்டு மெட்டிய தென்கொடுஞ்செய்கை தினமிருந்தால்
நகைபட்டுக்கெட்டழி வார்சிலர்பார்த்தெனை நானிலத்திவ்
வகைபட்டிடாம லதைப்போக்கியன்பர் வகைவகையாய்த்
தொகைமிக்கபோரிச் சரவணவெற்குநின் றொண்டளியே (௭௧)

தொண்டைக்கனியிதழ் வள்ளியைவேட்டுத் தொடர்ந்தடவி
பண்டைத்திருடிய நிற்போலயான்செயப் பார்த்ததுண்டோ
விண்டைட்புழைத்த சமராபுரேசநின் மெல்லடிக்கித்
தொண்டைக்கொளாது வறுமைவிலங்கைத் துவக்கலென்னை (௭௨)

துவக்கும் பொழுதின்ப மாய்ப்போ கப்போகத் துயரமதா
யவக்கும்பி மெய்யினி லீட்டிக்கொண்டேன் பின்னழிக்கவென்றால்
நவக்குப்பிடிட்டுந் தொலையாத தீத்தெனச் சாற்றுதிநற்
சிவக்கும்பதாம்புயத் தாய்போரிவாழுஞ் செயசிங்கமே (௭௩)

சிங்காரமுற்ற சமராபுரவன்பர் சிந்தைகொண்டாய்
பொங்காரமென்பு புனைந்தவன்மைந்த பொருசுபுன்சூர்ச்
சங்காரமன்பதை யாவையுங்காக்கத் தலைமையென்ற
சங்காரமுற்றநின் வந்தடைந்தேனெனைக் கண்டுகொள்ளே (௭௪)

கண்டுபடுமொழி குஞ்சரிநாயக கங்கைமைந்த
வண்டுபடும்பொழிற் போரியவென்னை வசப்படுத்தற்
கொண்டுகொலைய மொழிந்தஞ்சல்செய்ய வுகந்தனையேல்
மண்டுகொடும்புன் றொழிலனைத்தின் மறைந்திடுமே (௭௫)

மறையறைவேதிய மாமயின்மீதில் வருமுருக
தறைதிறைநீப மணிமார்பபோரியி ளுடவன்பர்க்
கிறையென்றவனா யளித்ததின்மேனி யிளைத்ததுவோ
அறையடியேனை யருளாதிருக்கு மதிசயமே. (எசு)

அதிகசவுந்தர காங்கேயசெங்கையயில்கொண்டவ
னதிகவரும்போ ரியசுகமீதெனச் சுட்டல்செய்வாய்
கதிகடாத்தக் கவைகைப்பதாகிக் கசடுப்பவை
மதிகளிப்பிக்குஞ் சுகமாகிநின்று மயங்கவினே (எஎ)

மயங்குஞ்சிலவழி கூடுஞ்சிலவழி மற்றுளசெய்
தியக்குஞ்சலன மனமாதலாவிதை யீடுசெய்தான்
வயங்கும் பணிகொள்ள னின்னதன்றேயென் வகுத்துரைப்பேன்
றயங்கும்பொழின்மா வளங்கவர்போரியந்தாணத்தனே (எஅ)

தானக் களிறுரித்தோன்மைந் தகந்த சமரபுரி
ஞானக் கவிஞகருணாகர முனநாவலற்கு
தானக் கவின்குழலிக்கும் பலர்க்கு நணுகினவம்
மானக் கருணைபதார்கண்ணதோவென் றன்மாட்டிலதே. (எகூ)

மாட்டிய குண்டல மண்டல முண்டவன் மாமருக
நாட்டிய போரூரிறைவ ரிவனுக்கு நல்குரவைக்
கூட்டியபோ தின்னுவானென் றுளத்திற் குறித்தெனைநீ
வாட்டியதோர்ந்தேனி னியுன்னுவேன்விழிவைத்தருளே (அ௰)

வைத்தியமல்கும் பிறவிப்பிணிக்கு வதியவர்க்குக்
கைத்தியமார்த்திடும் போரியிலானவ கந்தவெற்குத்
தைத்தியராமைம் புலாதியர் நோயெனுஞ் சன்மச்சுரப்
பைத்தியங்கொண்டலை வாரைக்கொலத்தருள் பாவிப்பையே (அக)

பாவிக்கணமொழி யாளைச்சமர பதிக்குமரன்
பாவிக்கணமென் றயர்கூதிமாலை பரிந்தெனக்குப்
பாவிக்கவென்று விடக்கருமாலைமுன் பாவித்தப்பின்
பாவிக்கவைத்தையவன் முகப்போல்வந் தழலிந்திவே. (அஉ)

இத்துளமாலை யணிமார்பபோரியி லீசகருங்
கத்துளமூர்பவன் பின்னவநின்றுட் கமலங்களொன்
னத்துளமாரவைத் தாளாதிருப்பி னசைப்பித்துமிச்
சித்துளமானிலத் தார்வணங்காமலுஞ் செய்விப்பனே (அங)

செய்யார் பொழிலமர் போரியடுன்கொடுஞ் செய்வினையைக்
கொய்யார் தமைக்கொய்து வித்தாண்டஞானக் குரவபொருள்
மொய்யார்கலி சூழுலகினின் றந்தைக்கு முன்னுரைத்த
மெய்யார் நினைப்பனெனக்குரையாயின் விவேகத்தையே (௮௪)

வேகத்தையேலத் தளைபட்டுழன் றவவ் வேதன்மிக்க
சோகத்தையுற்றிட வோர்சிரங்கொய்து நந் தொகவுதைத்தான்
ஆகத்தைவீழ்த் தவனுக்குக் குருவை யம்போரியிற்செந்
நாகத்தையண்டி னனண்டற்கதென் றிசை நாடவனே (௮௫)

நாடுங்கருத்து நணுகுங்கருத்து நின் னுமத்தைக்கொண்
டாடுங்கருத்தும மரர்க்கரிய வடிக்குமலர்
சூடுங்கருத்து மிலைபவமீய்ந்திடுந் தூர்ச்செயலே
தேடுங்கருத்திருந் தென்கொளப்போரியந் தேயத்தனே (௮௬)

தேயத்தகுந்தீவினை முற்றுமைம்பொறி தின்பவைகண்
மாயத்தகுந்தனி மெய்ஞ்ஞானவின்ப வழியிடைநின்
றேயத் தகுமுத்தி யுய்க்கத் தகும்போ ரியவெள்ளள
வாயத்தகுந்தன் னருட்டுளியென் கணளித்திடினே (௮௭)

அளித்தார்புனைந்தன்பர் பூசித்தனுதின மாய்ந்துகண்ணீர்
துளித்தார்வமுற்றகப் பெட்டியுள்ளேயுபர் சொன்னமென்றே
ஒளித்தாரவைக்க விருந்தனவோபத வொண்மலர்கள்
களித்தாரணஞ்சொலும் போரியிற்குஞ்சரி காதலனே. (௮௮)

காதலிற்காத லென்றேபெயரிட்டனர் கற்றுணர்ந்தோர்
ஆதலிற்பொய்க்குமதோ நீவராதலி னாதரத்தாற்
போதலிற்றப்பா தெனதுயிரிக்கணப் போதிற்கல்வி
யோதலிற்நேர்ந்தநற் போரூரவிங்ஙன்வந் தற்றுதியே (௮௯)

உற்றுருன தடிப் போதில்வண்டென்ன வொழுக்கத்தினுற்
பற்றுதவிச்சைபுன் பாசாடவிவேர் பதித்தறிஞர்
முற்றுதவிச்சையின் மூழ்கிக்கலங்குமிம் மூடனதைச்
சற்றுகினுமடைவேறு தென்போரிச் சதானந்தனே (௯௰)

சதாகதியுண்ணு மதால்வருநஞ்சமு தாச்செய்தவன்
சுதாகதிதந்தருள் போரியில்வாச துணைக்கமல
பதாகதிர்வேலவ ஞானவமுது பண்ணக்கடின
மதாகதித்தெய்து மென்னெஞ்ஞான தஞ்சைநீ யாதரித்தே. (௯௧)

ஆதார மென்றுமுன் விண்ணோர் தொழுதிட வாண்டனையான்
பாதார விந்தங் கதியென்றுபற்றப் பராமுகமா
மீதார வுன்னி லிரப்பவர் நிற்க விதரவர்க்குச்
சூதார ருத்தந்தரலொக்கும்போரித் துணையவனே (௯௨)

துணைவா விருவர்க் கெழில்போரிஞானச் சுகவுருவா
விணைவா ரிசமலர்த் தாளா வுனைக்கண்டு மென்வினைகள்
பிணைவா யிருப்ப தென்னங்கியிற்பஞ்சும் பிறங்களையும்
அணைவா விவெண்டா மனையொத்ததில்லை யருளெனக்கே (௯௩)

அருளாழிதன்னி லணுவாந்திவலை யவாக்கடலா
மிருளாழிபவெனக் குற்றிடில்வற்றி யிலாதுறுமோ
வுருளாழிவெய்ய வனுட்கிடப்போரி யுதையவனே
தெருளாழிமான்மரு காமருகாவுனை சிந்தைசெய்தே (௯௪)

சிந்திக்க வன்பனைத் தேடினையாயினுந் தேடி நின்னை
வந்திக்க யான்வலி தேவராவாளா வதிந்ததென்னின்
புந்திக்க ருத்தைப் புகல்புகலென்றவப் போகிக்குவிண்
டந்திக்க டனுல காண்டிடப்போரியிற் சார்ந்தவனே (௯௫)

சார்ந்த நமனுயிர் கொள்வான்வந்தாலுந் தமதுபொருள்
வார்த்த வறத்தின் வழிதன்னிலேதும் வழங்கிலர்போல்
ஈர்த்த பழவினை நின்னை வருத்தினு மீர்ம்பொழில்சூழ்ந்
தார்ந்த வண்போரியற் கன்பீ யிலையென் னழுநெஞ்சமே. (௯௬)

அழுங்கிய தென்மனம் புத்திமழுங்கிய தன்றிச்சித்தம்
புழுங்கிய தவ்வகங் காரமுந் துன்பம் பொருத்தியதே
யொழுங்கிய மற்றைக் கரணமென்செய்ய வுயர்நிலங்கள்
விழுங்கிய பேரிசை யாயிசைபோரியில் விஞ்சையனே. (௯௭)

விஞ்சை யதானின் புகழைச்சுருக்க விரும்பிக்கொஞ்சம்
பஞ்சை மயிரள வாத்திரித்தோரிழை பற்றியுயர்
பஞ்சை யுறும்பொன் வரைகட்டித்தூக்குதன் மானுமதென்
னெஞ்சை யிடங்கொண் டிருக்குங்கொல்போரி நிராமயனே (௯௮

மயங்கிய வென்மனப் பாலையிலேகண் வழியிட்டமாய்
வயங்கிய நின்மாவவயவப் பேரொழில் வார்புனலைத்
தயங்கிய வன்பெனும் பைங்கூழ்வளரச் சமரபுரி
யியங்கிய கந்தவென் றேவருள்பாய்ச்ச விரங்கிடுமே (௯௯)

இரங்கு விப்பாய்கொ லுன் றன்பொருளாமென்னை யெக்கருக்கண்
ணரங்கு வித்தாக விருத்திட்டலதன்ப ருக்குவையோ
திரங்கு றித்தேதெதன் றறிகிலன்போரிய சிந்தையைக்கைச்
சிரங்கு வித்தாடு மவர்பாலொளிருந் திருவளனே. (௩)

திருப்போரூரந்தாதி
முற்றிற்று.

## அச்சிற்பதிப்பித்தவர்களது விளக்கம்.

இருபத்து நான்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்மல்குஞானதேயானந்தசாத்மீக சிவகருணைவால
சேந்தன்குகன்வள்ளிகுஞ்சரிசமேதனுமை சேய்திருப்போரூர்தமிழ்ச்
செய்யுளந்தாதிதிருவொற்றியூர் அருணு சலச்சிங்கமின் றதனையன்
சேர்தங்கமலைமணிக்கங்கைநாடேர்முகை சிதப்பரிமும்முரசுசந்த்ர
வீர்மல்குவாள்சந்த்ரவட்டக்குடைச்சிங்க மேற்றகொடிவாடாதமல்
விகையலங்கற்சுரநதிக்குலங்காந்தமா விருஷிகோத்திரமும்படைத்
தேர்பிரப்பூரில்வாழ்முனிசாமிபுனிதனுமையென்னவடியேனியம்ப
வெழுதருவெழுத்தினிதியாலதனைமுன்சொன்ன வியலங்கமுடையவொற்றி
யூர்மல்குநயனப்பவேள்புத்ரனெளிர்சித்ர னுலகமித்ரன்களதீரன்
உதாரனெழில்திரனல்லவர்தமக்குபகார னென்பெருவளூரில்வாசன்
உயர்தேவபூசிதன்புருஷோத்தமன்ப்ரபல வுசிதகுணசாந்தனெவரு
முணர்வருந்தந்திரன்புயமத்தரன்புகழை யுறுசோமசுந்தரவேளும்
தார்மல்குசென்னைமுத்யாலுபேட்டைப்பதியுள் சார்கன்னிகோயிலருகிற்
றுன்வசிப்பவனீருர்தவனாநேசிப்பவன் றகுங்குசனையர்ச்சிப்பவன்
சத்யகுணபார்த்திபன் றனையண்டினர்க்கிளி தயாளபுகழாளனல்ல
தம்பிமால்புதல்வன்முனியப்பமகிபாலனுந் தாம்பதிப்பித்தனர்களே.

